கடவுள் துணை.

# முதுமொழிக்காஞ்சி.

## க - வது. சிறந்தபத்து.

1 ஆர்கலியுலகத்து மக்கட்கெல்லாம்
ஓதலிற்சிறந்தன் றொழுக்கமுடைமை.

இ-ள். கடல்சூழ்ந்தவுலகத்து மக்கட்கெல்லாம் ஓதலினு மிக்க சிறப்புடைத்து ஆசாரமுடைமை யென்றவாறு.

2 காதலிற்சிறந்தன்று கண்ணஞ்சப்படுதல்.

இ-ள். பிறர்தன்மேற்செய்யுங் காதலினுஞ் சிறந்தது பிறரால் கண்ணஞ்சப்படுதல்—எ-று.

3 மேதையிற்சிறந்தன்று கற்றதுமறவாமை

இ-ள். [illegible] மதியுடைமையா னறியு மறிவினுமிக்க சிறப்புடைத்து தான்கற்றதனைக் கடைப்பிடித்திருத்தல்—எ-று.

4 வண்மையிற்சிறந்தன்று வாய்மையுடைமை.

இ-ள். செல்வத்தினுமிக்க சிறப்புடைத்து மெய்யுடைமை—எ-று.



5. இளமையிற்சிறந்தன்று மெய்ப்பிணியின்மை

இ-ள். இளமையினுமிக்க சிறப்புடைத்து உடம்பு நோயின்மை—எ-று.

6. நலனுடைமையி னாணுச்சிறந்தன்று.

இ-ள். அழகுடைமையினுமிக்க சிறப்புடைத்து நாணுடைமை—எ-று.

7. குலனுடைமையிற் கற்புச்சிறந்தன்று.

இ-ள். நல்லகுலனுடைமையினுங் கல்வியுடைமை சிறப்புடைத்து—எ-று.

8. ஆற்றலிற்கற்றாரை வழிபடுதல்சிறந்தன்று.

இ-ள். தானொன்றைக் கற்குமதனினுஞ் சிறப்புடைத்து கற்றாரை வழிபாடுசெய்தல—எ-று

9. செற்றாரைச்செறுத்தலிற் றற்செய்கைசிறந்தன்று.

இ-ள். பகைவரைச் செறுத்தலினு மிகச்சிறப்புடைத்துத் தன்னைப்பெருகச்செய்தல்—எ-று.

10. முற்பெருகலிற்பிற் சிறுகாமைசிறந்தன்று.

இ-ள். செல்வ முற்காலத்துப் பெருகிப் பின்னர்க் கழிதலி னொன்றாநிலையிற் சிறுகாமை சிறப்புடைத்து—எ-று.

---



## ௨-வது. அறிவுபத்து.

பேரிற்பிறந்தமை யீரத்தினறிப.

இ-ள். கடல்சூழ்ந்தவுலகத்து மக்களெல்லாருள்ளு மொருவன பெருங்குடிப்பிறந்தமையை யவனீரமுடைமை யானேயறியக்கடவா—எ-று.

2. ஈரமுடைமை யீகையினறிப.

இ-ள். நெஞ்சினொருவனை கண்ணீரமுடையா னென்பதனை யவன் பிறர்க்குக்கொடுக்குங்கொடையினானே யறிவா—எ-று.

3. சோரா நன்னட் புதவியினறிப.

இ-ள். ஒருவன தப்பாத கடைப்பிடியுடைய நல்லநட்பினை யுடைய னென்ப தவனட்டார்க்குச்செய்யு முதவியினானே யறிப—எ-று.

4. கற்றதுடைமை காட்சியினறிப.

இ-ள். ஒருவனது கல்வியை யவன்ற னறிவினானே யறிவர்—எ-று.

5. ஏற்றமுடைமை யெதிர்கோளினறிப.

இ-ள். ஒருவனாராய்ந்து துணியவல்ல னென்பதனை யவன் மேற்கொண்டு பாதுகாக்குங் காப்பானேயறிவர்—எ-று.



6. சிற்றிற்பிறந்தமை பெருமிதத்தினறிப.

இ-ள். சிறுமையுடைய குடியின்கட் பிறந்தானென்பதனை யவன்செருக்கினானேயறிவர்—எ-று.

7. சூத்திரஞ்செய்தலிற் கள்வனாதலறிப.

இ-ள். ஒருவனையொருவன் படிறுசெய்யும் படிற்றாற் கள்வனாதலறிவர்—எ-று.

8. சொற்சோர்வுடைமையி னெச்சோர்வுமறிப.

இ-ள். சொற்சோர்வுபடச் சொல்லுதலா னவனுடையவெல்லாச்சோர்வையுமறிவர்—எ-று.

9. அறிவுசோர்வுடைமையிற் பிறிதுசோர்வுமறிப.

இ-ள். ஒருவன்றன்னறிவின்கட் சோர்வுடைமையி னெல்லாஞ் சோர்வுடைய னென்பதறிவர்—எ-று.

10. சீருடையாண்மை செய்கையினறிப.

இ-ள். ஒருவன் புகழுடையவாண்வினைத்தன்மையை யவன்செய்கையானறிவர்—எ-று.



முதுமொழிக்காஞ்சி, ௫

வது. பழியாப்பத்து.



1. யாப்பிலோரை யியல்புகுணம்பழியார்.

இ-ள். கடல்சூழ்ந்தவுலகத்து மக்களெல்லாருமொருமொரு செயலையினைக்கண்ணுறு நிலையில்லாதாரியற்கையாகியகுணத்தை யாவரும்பழியார்—எ-று.

2. பிறப்பிலோரை மீக்குணம்பழியார்.

இ-ள். மேன்மைக் குணமில்லாரை மேன்மைசெய்யாமையை யாவரும்பழியார்—எ-று.

3. பெருமையுடையதனருமைபழியார்.

இ-ள். பெருமையுடையதொன்றனை முடித்துக்கொள்கைய ரிதென் றதனைப்பழித்து முயற்சிதவிரார்—எ-று.

4. அருமையுடையதன் பெருமை பழியார்.

இ-ள். அருமையுடைய தொன்றினை முடித்துகொள்ளும் பொழு தரிதென்று பழித்ததின்கணுள்ள முயற்சிபபெருமை யைத்தவிரார்—எ-று.

5. நிறையச்செய்யாக் குறைவினைபழியார்.

இ-ள். ஒருவினையை நிரம்பச்செய்யாதவற்கு முன்போய்க் குறைவினையை யாவரும்பழியார்—எ-று.

க முதுமொழிக்காஞ்சி,

6. முறையிலரசா நாட்டிருந்துபழியார்.

இ-ள். நடுவு செய்யாதவரசா நாட்டின்கணிருந் த ு வர ேஉ டுவு செய்யாமையை யாவருமபழியார—எ-று.

7. செயதக்கநறகேளிர செய்யாமைபழியார.

இ ள். நமக்குதவிசெய்தநருக்கக நல்லகேளிருதவிசெய திலரென்று பிறர்க்குசசொலலிப பழியார—எ-று.

8. அறியாத்தேசத் தாசாரமபழியார.

இ-ள். தானறியாத்தேசத்தின்கடசென் றங்குளளாரொ ழு க்கத்தைபபழியார—எ-று.

9. வறியோன்வள்ளிய னன்மைபழியார.

இ-ள். வறுமையுடையானை வணமை யுடையா னலலனென று பழியார்—எ-று.

10. சிறியாரொழுக்கஞ் சிறந்தோருயபழியார.

இ-ள். சிறுமைக்குணமுடையாருடையகீழமைகுண தல த வொழுக்கத்தான்மிககாரும்பழியார—எ-று.

———*———

முதுமொழிக்காஞ்சி

சு- வது. துவ்வாப்பத்து.

———

பொருவாகவில்லை—எ-று

9 இரத்தலின் ஊங்கு இழிவரவில்லை

இ-ள். இரந்துயிர்வாழ்தலின் மேற்கிழமை யில்லை—எ-று.

10 இரப்போர்க்கீதலின் எய்துஞ் சிறப்பில்லை.

இ-ள். இரப்போர்க்குக் கொடுப்பதின்மிக்கதா யெய்து மேன்மையில்லை—எ-று.

———*———

## முதுமொழிக்காஞ்சி.

## எ - வது - பொய்யாப்பத்து.

1. பேரறிவினோனினிது வாழாமைபொய்.

இ-ள். ஆர்கலியாற் சூழப்பட்ட வுலகத்திலுள்ள மக்களுள் ஒருவன் பேரறிவுடையனாயினவனை மதத்தாலின்புற்று வாழாமை பொய்—எ-று.

2. பெருஞ்சீரோன்றன் வெகுளியின்மைபொய்.

இ-ள். பெருஞ்செல்வத்தைப் பெற்றொருவன் வெகுளாமைபொய்—எ-று.

3. கள்ளுண்போன்றன் சோர்வின்மைபொய்.

இ-ள். கள்ளையுண்போனொழுக்கஞ் சோர்வின்மை பொய்—எ-று.

4. காலமறியாதோன் கையுறல்பொய்.

இ-ள். காலமறிந்து முயலாதோன் கருமமுடித்தல் பொய்—எ-று.

5. மேல்வரவறியாதோன் றற்காத்தல்பொய்.

இ-ள். எதிர்காலத்துவரு மிடையூறறியாதான் றனக் கரண்செய்து காத்தல்பொய்—எ-று.



6. உறுவினைகாய்வோ னுயர்வேண்டல்பொய்.

இ-ள். மிக்ககருமஞ்செய்கைக்கு மடித்திருப்போன் நீங்காக்கம வேண்டுதல்பொய்—எ-று.

7. சிறுமைநோனாதோன் பெருமைவேண்டல்பொய்.

இ-ள். பிறர் தனக்குச்செய்யும் பணிவினைப்பொறாதோன் தனக்குப் பெருமைவேண்டுதல் பொய்—எ-று.

8. பெருமைநோனாதோன் சிறுமைவேண்டல் பொய்.

இ-ள். பிறர்க்குத்தானரியனும் பெருமை வேண்டாதான் தனக்குச் சிறுமைகுணம் வேண்டுதல்பொய்—எ-று.

9. பொருணசைவேட்கையோன் முறைசெயல்பொய்.

இ-ள். பொருணசையாலவரும் வேட்கையையுடையான் முறைசெய்தல்பொய்—எ-று.

10. வாலியனல்லாதோன் தவஞ்செய்தல்பொய்.

இ-ள். மாதத்தின்கட்டூயனல்லாதோன தவஞ்செய்தல் பொய்—எ-று.

---

## முதுமொழிக்காஞ்சி.

### அ - வது - எளியபத்து.

---

1. புகழ்வெய்யோர்க்குப் புத்தேணாடெளிது.

இ-ள். ஆர்கலியாற்சூழப்பட்டவுலகத்துமக்களெல்லாருள்ளும், ஒருவர்க்குப்புகழ்விரும்பிற் கடவுளர்வாழுநாடுபெறுதலெளிது—எ-று.

2. உறழ்வெய்யோர்க் குறுசெருவெளிது.

இ-ள். பிறரொடு கலகம்விரும்புவார்க்கு மிக்கசெருவெளிது—எ-று.

3. ஈரம்வெய்யோர்க்கு நசைகொடையெளிது.

இ-ள். மனத்து ளீரத்தைவிரும்பியிருப்பார்க்குப் பிறனொருவன் கேட்டகொடுத்தலெளிது—எ-று.

4. குறளைவெய்யோர்க்கு மறைவிரியெளிது.

இ-ள். குறளைச்சொல்லை விரும்புவார்க்கு ஒருவன்மறையைச் செய்தோன்றனை வெளிப்படுத்திப் பிறனையறிவித்தலெளிது—எ-று.

5. துன்பம்வெய்யோர்க் கின்பமெளிது.

இ-ள். ஒன்றனை முயன்றவருக் கின்பத்தைப்பெறுதார்க்கின் பமடைதலெளிது—எ-று.

௰௪ முதுமொழிக்காஞ்சி.

6. இன்பம்வெய்யோர்க்குத் துன்பமெளிது.

இ-ள். முயன்றவருந் தனமையாலவரும்இன்பத்தைத்தவிருந்து வாரககுப பொருளில்லாமை...வருந்துன்பமெளிது—எ-று.

7. உண்டிவெய்யோர்க் குறுபிணியெளிது.

இ-ள். உண்டிமிகவிரும்பினோர்க்கு மிககபிணியெளிது-எ-று.

8. பெண்டிர்வெய்யோர்க்கு படுபழியெளிது.

இ - ள். பெண்டிரைமிகவிரும்பினோர்க் குண்டாகும்பழியெளிது—எ-று.

9. பாரமவெய்யோர்க்குப் பாத்தூணெளிது.

இ-ள். பெருமையை விரும்பினோர்க்குப் பகுத்துண்டலெளிது—எ-று.

10. சார்பிலோருக் குறுகொலையெளிது.

இ -ள். நன்னட்பைச்சாராதோர்க்குப் பொருந்தியகொலைத்தொழில்செய்தலெளிது—எ-று.

---



## ௯ - வது. நல்கூர்ந்தபத்து.

1. முறையிலரச னாடுநல்கூர்ந்தன்று.

இ-ள். ஆகலியாற்கூறப்பட்ட அவ்வுலகத்துள்ளெல்லா மக்கட்கும் முறைமைசெய்யாவரசனாடு வறுமையுறும்—எ-று.

2. மிகமூத்தோன் காமம் நல்கூர்ந்தன்று.

இ-ள். மிகமுதிர்ந்தான் காமத்திற்றுயக்குறுகாசின் வறுமையுறும்—எ-று.

3. செற்றுடனுறைவோனைச் சேர்தனல்கூர்ந்தன்று.

இ-ள். தன்னைச் செறுந்தொழுகுவானைச் சென்றடைதல் வறுமையுறும்—எ-று.

4. பிணிகிடந்தோன் பெற்றவின்பநல்கூர்ந்தன்று.

இ-ள். பிணிபட்டவுடம்பை யுடையானுக்குக் கிடைத்தவின்பம் வறுமையுறும்—எ-று.

5. தற்போற்றுவழிப்புலவி நல்கூர்ந்தன்று.

இ-ள். தன்மேலன்பாற் பேரார் தாரத்திறத்துப் புகைத்தும் புலவி வறுமையுறும்—எ-று.



6. மூதிாவுடையோன் மேனியணி நல்கூர்ந்தன்

இ-ள். மூத்த வுடம்பினையுடையவன் அணியுடனி வறுமையுறும்—எ-று.

7. சொற்சோர்வுடையோன் சொல்லவு நல்கூர்ந்தன்று.

இ-ள். தன் சொற்சொல்லாவிடத்துச் சொல்லியசொல் வறுமையுறும்—எ-று.

8. அகமறியோனண்ணல் நல்கூர்ந்தன்று.

இ-ள். மனத்தினறனுடைய அறிவறியோனுடைய நல்லனவற்றின் நன்மை வறுமையுறும்—எ-று

9. உட்கில்வழிச்சினம் நல்கூர்ந்தன்று

இ-ள். மதியாதார் முன் வெகுளும் வெகுட்சி வறுமையுறும்—எ-று.

10 நட்பில்வழிச்சேறல் நல்கூர்ந்தன்று.

இ-ள். தன்னோடு நட்பில்லாதார்மாட்டுப் போனதனாற் சென்றது வறுமையுறும்—எ-று.

---



## ௧0 - வது. தண்டாப்பத்து.

---

1. ஓங்கல்வேண்டுவோ னுயர்மொழிதண்டான்.

இ-ள். ஆர்கலியாற் சூழப்பட்ட உலகத்தெல்லாமக்களுள்ளும் உயர்வுவேண்டுவோன் பிறர்க்குயர்த்துச்சொல்லு மொழிகளை மாறான்—எ-று.

2. வீங்கல்வேண்டுவோன் பல்புகழ்தண்டான்.

இ-ள். ஆக்கத்தைவேண்டுவோ னொருவன் றனக்குப் பலபுகழ்வருஞ் செய்கை களையான்—எ-று.

3. கற்றல்வேண்டுவோன் வழிபாடுதண்டான்.

